72. இமவானுடைய மாளிகைக்குள் ஈசனார் ஓர் ஆஸனத்தில் உட்கார்ந்து விதிப்பிரகாரம் இரத்தனத்துடன் தமக்குக் கொடுக்கப்பட்ட அர்க்கியம், மதுவர்க்கம், ததி, புது வெண்பட்டு முதலியவைகள் இமவான் தமக்குக் கொடுக்க மந்திரத்துடனே பெற்றுக்கொள்ளலானார்.

73. அதன்பிறகு அச்சிவபெருமான் வெண்பட்டாடை அணிந்துநிற்க அவரை அரண்மனை வேலையில் பயிற்சியடைந்தவர்கள் வெகு வணக்கத்துடன் மணப்பெண் உட்கார்ந்திருந்த இடத்துக்குப் புதிதாய்த்தோன்றும்சந்திரகிரணங்கள் வெண்ணுரை பொங்கி விளங்கும் கடல்நீரைகடற்கரைக்கு அழைத்துப் போவதுபோல அழைத்துப் போனார்கள்.

74. தமது முகமே காந்தியுடன் விளங்கும் சந்திரனாகக் காணப்பட்ட அவ்வுமையால் சிவபெருமான் சரத்காலத்தால் உலகம் அழகாக விளங்குவதுபோல தமது கண்களாகின்ற ஆம்பல் மலர்கள் நன்றாக மலரப்பெற்றவராகவும் தமது உள்ளமாகின்ற நீர்தெளியப் பெற்றவராயும் மாறி நின்றார்.

75. அவ்விரு மணமக்களுடைய கண்கள் தற்செயலாக ஸந்தித்துத் திகைத்துக் கொஞ்சகாலம் அப்படியே நின்று பிறகு திருப்பப்பட்டு ஒன்றை மற்றொன்று பார்க்க ஆசையுடன் அமைந்தவைகளாகவிருந்தும் வெட்கத்தால் தகையப்பட்டவைகளாய் விளங்கின.

76. மலைமன்னவரால் எடுத்துக்கொடுக்கப்பட்டதும் ஈசனைக்கண்டு பயந்து உமையின் தேகத்தில் பதுங்கியிருந்த மன்மதனுடைய முதல் முளைபோல் விளங்குகின்றதுமான பார்வதியின் கையினுடைய சிவந்த விரலைச் சிவபெருமான் தமது கரத்தால் பற்றலானார்.

77. உமைக்கு மயிர்க்கூச்சும் சிவபெருமானுக்கு விரலில் வியர்வையும் அத்தருணத்தில் உண்டானதானது அவ்விருவர்களும் தங்கள் கைகளைப் பற்றிக் கொண்டபொழுது அவ்விருவர்களிடமும் மன்மதன் ஒரே விதமாகத் தனது வல்லமையைக் காட்டினான் என்று சொல்லவேண்டியதாயிருந்தது.

78. எக்காரணத்தால் உலகமெங்கும் வதூவர்கள் மேலான சோபையைக் கலியாணப்பந்தலில் அடைந்து விளங்குகின்றார்களோ அவ்விருவர்களுடைய கலியாண சோபையைப்பற்றி நாம் சொல்லவும் வேண்டுமோ! ஒவ்வொரு கலியாணப்பந்தலிலும் உமையும் சிவனும் கலியாணப் பெண்ணிடமும் கலியாண மகனிடமும் முறையே புகுந்திருக்கின்றனர்கள் என்பது சாஸ்திரம்.

79. ஓங்கி எரிந்து கொண்டிருந்த ஓமத்தீயை அவ்விருவர்களும் வலம் வந்தபொழுது மேருவின் தாழ்வரையை இடைவிடாது சுற்றும் பகலும் இரவும்போல் அவர்கள் பிரகாசிக்கலானார்கள்.

80. ஒருவரை மற்றொருவர் கைப்பற்றிய ஆநந்தத்தால் கண்கள் மூடிய அந்தத் தம்பதியைப் புரோகிதர் மூன்று தடவை ஓமத்தீயை வலம் வரச் செய்து கொழுந்து விட்டெரியும் அத்தீயில் மணமாதின் கையால் பொரியை ஓமம் பண்ணச் செய்வித்தார்.

81. புரோகிதருடைய கட்டளைப்படி பார்வதி நன்றாக மணம் வீசிய அப்பொரிப்புகையை முகத்தில் படும்படி வாசனை பிடித்தபொழுது அப்புகையின் திரள் அவ்வம்மணியின் கன்னங்களில் பரவ அது கொஞ்சநேரம் அவ்வம்மணியின் காது நகைபோல விளங்கிற்று.

82. மணச்சடங்கு என்று பார்வதி அவ்வண்ணம் புகைபிடித்தபொழுது அவள் முகம், அவள் கன்னங்கள் வியர்த்தும், சிவந்தும், அவள் கண்களிலிட்ட மையின் காந்திகரைந்தும், அவள் காதுகளில் அணிந்திருந்த நாற்றுகள் வாடியும் கொஞ்சம் மாறி பிரகாசிக்கலாயிற்று.

83. அதன் பிறகு புரோகிதர் பார்வதியைப் பார்த்துப் பின்வருமாறு சொல்லலானார்:—குழந்தாய், இந்த அக்கினிதான் உனக்கும் சிவபெருமானுக்கும் நடந்த விவாகத்துக்குச் சாட்சி தேவதை. இனி நீ உனது கணவராகிய சிவபெருமானுடன்கூட நின்று ஓர்வித விசாரமின்றி உனது தர்மங்களை நடத்தக்கடவாயாக."

84. பவானிதேவியும் அவ்வாறு குருசொன்ன புத்திமதியைத் தனது காதுகளைக் கண்கள்வரையில் விசாலமாகச் செய்துகொண்டு கோடையால் நன்றாக வறண்டிருக்கும் பூமி மேகத்தினின்று பொழியும் முதல் மழையைக் குடிப்பதுபோல் கேட்கலானாள்.

85. எப்பொழுதும் தனது கண்களுக்கு அழகாக விளங்குகிறவரும் என்றென்றைக்கும் தனக்குக்கணவருமான சிவபெருமானால் துருவ நட்சத்திரத்தை பார் என்று ஏவப்பட்டதும் பார்வதி தனது முகத்தை

மேல்தூக்கிப்பார்த்து வெட்கத்தால் கொஞ்சம் வாய் குளற "பார்த்தேன்" என்று மெதுவாக மறுமொழி சொன்னாள்.

86. இவ்வாறு கலியாணச் சடங்கை நன்றாக அறிந்த புரோகிதரால் பாணிக்கிரகணம் செய்து வைக்கப்பட்ட உலகத்துக்கே தாய் தந்தைகளான உமாமகேசுவர்கள் பத்மாசனத்தில் வீற்றிருந்த பிரமதேவரை நமஸ்காரம் பண்ணினார்கள்.

87. பிரமதேவர் அப்பொழுது உமையைப்பார்த்துச் "சுபங்கள் நிரம்பியமாதுமாணிக்கமே, வீரனாகிய குழந்தையை நீபுத்திரனாக அடையக்கடவாய்!" என்று ஆசீர்வாதம் பண்ணலானார். அதே பிரமதேவர் தாம் எல்லா ஆசீர்வாதங்களுக்கும் நாயகனாக விருந்தும் ஈசனால் விரும்பத்தக்கது ஒன்றுமில்லை என்று ஏற்கனவே அறிந்துணர்ந்தவராகையால் அவரை உத்தேசித்து ஒன்றும் சொல்லாமல் வாயை மூடிக்கொண்டார்.

88. அவ்விரு மணமக்களும் பிரமதேவரை நமஸ்காரம் செய்தபின்பு புஷ்பம் முதலியவைகள் அழகாகப் பரப்பி விளங்கிய சூடாமணியின்மேல் பொன்னாலாகிய ஆசனத்தில் வீற்றிருந்துகொண்டு உலகத்தில் * எல்லாருக்கும் நடக்கும் மங்கலாக்ஷதை தலைமேல் பெறுதல் என்றதை அடைந்தார்கள்.

89. அப்பொழுது அவ்விருவர்களுக்கும் பூமாது தமது கையால் ஒருதாமரைத் தண்டை இலையுடன் பற்றி அவ்விலையின் ஓரங்களில் தத்தளிக்கும் ஜலத்திவலைகளை நல்முத்து சரங்களாக விளங்க, அத்தாமரைத்தண்டே குடைக்கம்பாக, அவ்விலையே குடையாகக் குடைபிடிக்கலானாள்.

90. ஸரஸ்வதிதேவி அப்பொழுது அவ்விருவர்களையும் இருவித வாக்கால் ஸ்தோத்திரம் பண்ணலானாள்.—வெகு பரிசுத்தமான வாக்காகிய ஸம்ஸ்கிருதத்தால் ஈசனையும் வெகு சுலபமாய் அர்த்தமாகும் பிராகிருத பாஷையால் உமையையும் தோத்திரம் பண்ணலானாள்.

91. அதன்பிறகு அவ்விருவர்களும் ஒரு முகூர்த்தகாலம் ஊர்வசி முதலிய தேவ மாதுகள் ஆடிய நாடகத்தைப் பார்த்துக்கொண்டிருந்தார்கள்.

* உலகவழக்கத்தை மனத்தால்கூட நாம் தடுக்கலாகாது என்பதுவிதி. ஆனதுபற்றி உலக தந்தைகளே அக்ஷதைவாங்கிக் கொள்ளலானார்கள்.

ன் என்பதற்கு மூல கிரந்தத்தைப் பார்க்க.

92. அந்நாடகம் முடிந்ததும் மணமனைவியுடன் வீற்றிருந்த சிவபெருமான் தாட்களில் இந்திரன் முதலான தேவர்கள் தங்கள் கிரீடங்களில் கைகூப்பி விழுந்து பார்வதி தேவியின் விவாகத்துடன் மன்மதனுடைய சாபம் நீங்கி அவனுக்குத் தனது மேனி வந்துவிட்டபடியால் அவன் பணிவிடையை ஒப்புக்கொள்ளவேண்டும் என்று யாசிக்கலானார்கள்.

93. அப்பொழுது பகவானும் கொஞ்சமேனும் கோபமென்பது இல்லாமல் அப்படியே என்று ஒப்புக்கொண்டு அம்மன்மதன் தன்மேலும் தனது பாணங்களைவிட விடைகொடுத்தார். காரியத்தை நன்றாக அறிந்த புத்திமான்கள் காலமறிந்து செய்யும் விண்ணப்பம் எப்பொழுதும் பயனுள்ளவைகளாய் முடிகின்றனவல்லவா.

94. அதன்பின்பு சந்திரமௌலி தேவக்கூட்டங்களுக்கு விடைகொடுத்து அனுப்பிவிட்டுப் பார்வதியைத் தமது கையால் பற்றி அழைத்துக்கொண்டு மங்கலார்த்தமாகப் பொன்குடங்கள் நீர்நிரம்ப வைக்கப்பட்டும் பூக்கோலங்கள் அழகாகப் போடப்பட்டுப் பூமியில் படுக்கை விரிக்கப்பட்டுமிருந்த பள்ளியறைக்குள் புகுந்தார்.

முற்றிற்று.

[இதற்கு மேல்பட்ட பாகம் மிக்க ஸ்ருங்கார ரஸமுடைமையாலும், அதன்றியும், அப்பாகத்தை எழுதியது காளிதாஸ கவிதானோ என்பது ஸந்தேகத்திருப்பதாலும், பண்டித நடேசசாஸ்திரியார் இதற்குமேல் இருக்கும் பாகத்தை தமிழில் மொழிபெயர்க்கவில்லை.]

---

இவ்விவேகபோதினியில் தொடர்ச்சியாக வந்த இந்தக் குமாரசம்பவமென்ற இந்நூலை ஜூலைமீ முதல் தேதியில் அதற்கேற்ற சில சித்திரப்படங்களுடன் புத்தக ரூபமாக வெளியிடப்படும். இதன் விலை அணா 12. ஜூலைமீ முதல் தேதிக்குள் தங்கள் பெயர்களை ரிஜிஸ்தர் செய்து கொள்ளுபவர்களுக்கும் விவேகபோதினியின் சந்தாதாரர்களுக்கும் அணா எட்டுதான் முன்பணம் அனுப்பவேண்டிய தவசியமில்லை. எழுதியனுப்பினால் போதுமானது.

# சிறுவர்களுக்கான பக்கங்கள்

## CHILDREN'S PAGES

பிள்ளையார் பிடிக்கக் குரங்காய் முடிந்தது.— பிள்ளையார் யானைமுகம் உடையவர். இவர் விக்கிரஹத்தை மிகுந்த ஜாக்கிரதையாகச் செய்ய வேண்டும். யானையின் முகம் வைக்குங்கால் அது ஓர்வேளை குரங்கின் முகமாகிவிட்டாலும் விடலாம். பழக்கம் இல்லாத ஸ்தபதி ஒருவன் பிள்ளையார் விக்கிரகத்தைச் செய்யப் புகுவானேயானால் அவன் குரங்கின் உருவையே ஓர்வேளை செய்து முடித்தாலும் முடிப்பான். பிள்ளையார் ஸகல விக்கினங்களையும் போக்கி ஆராதிப்பவருக்கு நன்மையை உண்டாக்குபவர். ஆதலால் தான் அவருக்கு விக்நேச்வரர் என்று பெயர் வந்தது. குரங்கோ இருந்தவிடத்தில் இராது ஸதா ஓடிக்கொண்டும் விஷமங்களைச்செய்துகொண்டும் இருக்கும்ஓர்ஜந்து. ஆகவே இந்தப் பழமொழிக்கு 'மேலான ஓர் விஷயத்தைச்செய்யப்புகுந்து பயனடைய உத்தேசித்த இடத்தில் தாழ்ந்ததாயும் பயனற்றதாயும் உள்ள முடிவு கைகூடுவது' என்று பொருள். இந்தப் பழமொழியில் அடங்கியிருக்கும் பொருளை மிகுந்த ஆற்றலுடன் அடக்கியுள்ளது 'கிணறுவெட்ட பூதம் புறப்பட்டது' என்ற பழமொழி. இதன் பொருள், 'ஓர் லாபத்தை உத்தேசித்த ஓர் காரியத்திலிருந்து ஓர் அபாயம் உண்டாவது' என்பது பொருள். 'பிள்ளையார் பிடிக்கக் குரங்காய் முடிந்தது' என்ற பழமொழியின் முடிவு அவ்வளவு அபாயகரமல்ல, பார்ப்போர் கண்டு நகைக்கத்தக்க இழிவானதே ஒழிய வேறல்ல.

இனி பிள்ளையார் பிடிக்கக் குரங்காய் முடிவதற்குத் தக்க உதாரணங்கள் கொடுப்போம். சித்திரம் எழுதுதல் முதலியவைகளில் எழுதுவோன் நினைத்தபடி சித்திரம் முடிவு பெறாவிடில், அது இந்தப் பழமொழிக்கு உதாரணம் ஆகும். வீடுகட்டி ஸுகம் அடையவேண்டும் என்று தொடங்கிய ஒருவன் அதிகப் பணம் செலவிட்டும் ஸௌகர்யமான வீட்டைக் கட்டிமுடிக்காவிடில்அவன்தொழில் இப்பழமொழியிலுள்ள தொழிலே. இதுபோலவே உத்தேசித்த முடிவுகைகூடாது எங்கெங்கேசற்றுமாறாகமுடிந்து அபாயமில்லாமல் இருக்கின்றதோ அங்கங்கே யெல்லாம் இப்பழமொழி பொருத்தமாக இருக்கும்—கிணறுவெட்டபூதம் புறப்பட்டது'என்ற பழமொழிக்குப்பொருந்திய உதாரணங்கள், பொதுவாக ஓர் கெடுதியைச்செய்துநன்மைஅடையவேண்டும்என்று முயலும் ஒருவன் தீமையொன்று செய்த கெடுதிக்காக உள்ள தண்டனைக்கு ஆளாகும்படி நேருவதும், ஒரு குற்றமும் அறியாதவனாய் ஸஹாயம் செய்யவேண்டும் என்ற எண்ணத்துடன் ஓர் சண்டை முதலியவைகளுள் பிரவேசிக்கும் ஒருவன்மேல் அவனே சண்டைக்கு மூலகாரணம் என்ற பழி சுமருவதும், ஆகிய இது போன்றவைகளே.

இனி இப்பழமொழிக்கு த்யான விஷயத்தில் ஓர் பொருளும் உண்டு. பிள்ளையாரைப் போன்ற தேவதைகளை த்யானம் செய்யப்புகும் ஓர் பக்தன் அந்த தேவதா உருவத்தை மனதின்முன் நிறுத்த முயலுவான். ஆனால் அவன் மனதின் சஞ்சலத்தால் அந்த உருவம் நிற்காது மறையும். அதனோடுகூட மனது வெவ்வேறு எண்ணங்களில் பாய்ந்தோடும். ஓரோர் வேளைகளில் குரங்குமுதலிய விசித்திரஉருவங்களும் அவன் மனக்கண்முன் வரும். ஆகவேமுதலில்த்யானம் செய்யத்தொடங்கியவன் 'பிள்ளையார் பிடிக்க எண்ணிக் குரங்காக முடிப்பான்.' மேலும் குரங்கு அதன் சஞ்சலம் முதலியகுணங்களால் மனதைக் குறிப்பிக்கும் ஓர்பதம். இதுபற்றியே தாயுமானவரும் 'மனக்குரங்கு' என்றார். ஆகவே 'குரங்காய் முடிந்தது' என்ற தொடருக்கு 'மனதின் சஞ்சலமாகவே முடிந்தது' எனக்கொண்டுஇப்பழமொழிக்குத்த்யானவிஷயமாகப் பின்வருமாறு பொருள் கூறலாம்: அதாவது, த்யானம்செய்யப்புகும்அபக்குவிக்குஸாதாரணமாக முடிவில் மனம் சஞ்சலப்பட்டு ஓடியது மாத்திரம் தெரியுமே யல்லது த்யானஸுகம் விளங்காது அவன் பிரயத்தனம் பிள்ளையார் பிடிக்கக் குரங்காய் முடிந்த கதையாகும் என்பதே.

வேதாந்த விஷயமாக இப்பழமொழியைப் பெரியோர் சில ஸமயங்களில் உபயோகப்படுத்துவது வழக்கம். 'குரங்கு' என்பதை 'மனது' என்று கொண்டு 'குரங்காய் முடியும்' என்பதை 'மனத்தின் காரியமாக முடியும்' என்று பொருள்படுத்துவர். ஆகவே பரம்பொருளைப்பற்றித் தியானம் செய்ய முன் நிஷ்டையில் உட்கார்ந்தாலும் தக்க குருவாம் ஸஹாய மில்லாமற்போனால் த்யானம், நிவிருவு விஷயம் எல்லாம் வெறும் மனத்தின் காரியமாகவே முடியும். மேலும் பரமபதம் எய்தி பரம்

பொருளிடம் இரண்டறக் கலக்கும்வரையில் பரம்பொருளின் உண்மை ரூபம் இன்னதென்று உணர முடியாதாகையால் அதுவரையில் பரம்பொருளைப் பற்றி எண்ணும் எண்ணங்கள் யாவும் அ[illegible] தாழ்ந்ததே; அதாவது பிள்ளையாராகிய பரம்பொருளைப் பிடிக்க எண்ணி மனக்காரியமாகித் தாழ்ந்த எண்ணங்களாகிக் குரங்கேகிட்டும். ஸதாமீருதிருப்பது பரம்பொருள் ஒன்றே. அதைவிட வேறு வஸ்துவே கிடையாது என்பது பெரியோரது துணிபு. அதே இந்திரியங்கள் முதலிய தாழ்ந்த கருவிகள் மூலமாக நோக்குமிடத்து உலகமாகத் தோற்றுகிறது. ஆகவே பரம்பொருளை இந்திரியங்கள் மூலமாக நோக்குமிடத்து விசித்திர உலகமாகக் காணப்படுவதே 'பிள்ளையார் பிடிக்கக் குரங்காக முடிந்தது' என்பர். பரம ரஹஸ்யங்களடங்கிய வேதங்களாற்கூட பரம்பொருளை எட்ட முடியாது. அதை ஒருவாறு கூருமல் கூறுவதால் பரம்பொருளாகிப் பிள்ளையாரைப்பிடிக்க எண்ணித்தமது வார்த்தைகளால் அவ்வாறு செய்யமுடியாது, அதைப் பற்றிச்சற்றுக் குறைவான லக்ஷணங்களையே முடிவாகக்கூறும். பரம்பொருள் விஷயத்தில் வேதங்களே பிள்ளையார்பிடிக்க எண்ணிகுரங்காய் முடிக்கின்றன என்று சொல்லுவர்.

பரோபகாரமில்லாத தபஸ்.—முன்னொருகாலத்தில் விதர்ப்பதேசத்தில் சுவேதன் என்றொரு அரசன் இருந்தான். அவன் தம் தம்பிமார்களுக்கு ராஜ்யத்தைக்கொடுத்துவிட்டு ஓர் நிர்ஜனமான காட்டை அடைந்து அங்கு ஓர் குளக்கரையில் பர்ணசாலை கட்டிக்கொண்டு தபஸு செய்யத் தொடங்கினான். இப்படி இவன் செய்துகொண்டு வருகையில் இவன் தேக நழுவுங்காலம் வர இவன் இறந்தான். அப்பொழுது வந்த விமானத்திலேறிக்கொண்டு இந்திரலோகம்போக அங்கு அவனுக்குப் பசியும் தாகமும் அதிகரித்தன. இதன் காரணத்தை உள்ளபடி உணர இவன் பிரம்மாவிடம் போனான். அவர் இவனை நோக்கி, "அப்பா, நீ தபஸு செய்யுங்கால் உனது தேஹத்தைமாத்திரம் போஷித்துவந்தாயே ஒழிய, [illegible] சிந்தையோடிருக்கவே இல்லை. ஆதலால் [illegible]டம் வந்தது. இந்தக் கொடிய பசி தீரும் வரையிலும் நீ உனது பிணத்தைத் தினம் [illegible] தின்னவேண்டும். ஒவ்வொரு நாள் காலையிலும் உன் பிணம் உன் பரணசாலைக்கு அருகாமையிலிருக்கும் குளத்தில் மிதக்கும். போகலாம்' என்றார். சுவேதனுக்கு மிகுந்த துக்கம் வந்துவிட்டது. 'ராமேசுவரம் போயும் சனிச்சரன் விடவில்லை' என்றகதையாக இவனுக்காகபிரம்மதேவரைநோக்கி "ஸ்வாமி, எவ்வளவுநாள் நான் இவ்வாறு வருந்தவேண்டியது? இதற்குவிமோசனம்இல்லையா?" என்றுகேட்க, அதற்குஅவர் "அப்பா! உன் குளக்கரைக்கு அகஸ்தியர் வருவார். அவருக்கு ஓர் தானம் செய்தால் உன் பாபம் நீங்கி இந்தக் கஷ்டத்தினின்றும் விடுபடுவாய்" என்று கூறினார். சுவேதனும் தினம் காலையில் அவ்வாறே செய்து கொண்டு வந்தான்.

இப்படி இருக்கையில் சுவேதன் தபஸு செய்த காட்டில் ஓர்நாள் யாத்திரை செய்துவந்த அகஸ்தியர் நுழைந்தார். காடு நிர்ஜனமாக இருந்தது; ஜந்துக்கள்கூட அதில் காணப்படவில்லை. மிகுந்த ஆச்சரியத்துடன் உள்ளே ஸஞ்சரித்துகொண்டு வருகையில் சுவேதன் ஆசிரமத்தையும் அதன் அருகாமையிலுள்ள ரமணீயமான குளத்தையும் கண்டார். இங்காவது யாராவது ஓர் ரிஷி இருக்கலாம் என்ற எண்ணத்துடன் ஆசிரமத்துள் நுழைந்தார். அங்கு கூட ஒருவருமில்லை. அப்பொழுது ஸூர்யாஸ்தமன ஸமயமாக இருந்ததால் அகஸ்தியர் அந்தக் குளத்தில் விதிப்படி மாலைக் கடனை முடித்துக் கொண்டு அதிலிருந்து தீர்த்தம் எடுத்துக் குடித்துவிட்டு அந்த ஆசிரமத்துள் பகவத்தியானம் செய்துகொண்டு தங்கினார். மறுநாள் காலையில் எழுந்து குளக்கரை வந்து பார்க்கிறாரோ! அந்தக்குளத்தில் ஓர் பெரிய பிணம் மிதந்துக்கொண்டிருந்தது. "இந்த நிர்மானுஷ்யமான இடத்தில் இத்தனை பெரிய பிணம் ஏது? ஒருவேளை இந்தப் பரணசாலையில் இருந்தவர் ஒருவர் மாத்திரம் தான் இக்காட்டிலிருந்தவரா யிருக்கலாம். அவர் ஒருவேளை நேற்றுத் தவறி இக்குளத்தில் விழுந்து ஸஹாயத்திற்கு ஒருவரும் இல்லாததால் இறந்துவிட்டார் போலும்" என்று அகஸ்தியர் எண்ணமிட்டுக்கொண்டிருக்கையில் ஆகாயத்திலிருந்து அப்ஸர ஸ்திரீகளால் மரியாதை செய்யப்பட்டு விமானத்தில் ஏறிக்கொண்டு ஓர் திவ்யபுருஷன் இறங்குவதைக்கண்டார். "இதென்ன ஆச்சரியம்!" என்று வியந்துகொண்டிருக்கையில் இந்தத் திவ்ய புருஷன் விமானத்தி

யிருந்திறங்கி குளக்கரை வர அந்தப்பிணமும்அவன் அருகே வந்தது. அப்பொழுது அவன் அதை மிகுந்த ஆவலுடன் தின்று தண்ணீர் குடித்துவிட்டு விமானத்தில் ஏறிப்போகத் தலைப்பட்டான். இதை எல்லாம் பார்த்திருந்த அகஸ்தியர் மிகுந்த வியப்பும் துக்கமும்அடைந்து "இதுகூடவா ஸ்வர்க்கத்தில்! ஸ்வர்க்கம்போயும் இவனுக்குத் துன்பம் தீரவில்லையா?" என்று எண்ணமிட்டுக்கொண்டு அந்தத் திவ்ய புருஷனைக்கூவிஅழைத்து "ஏன் இம்மாதிரி அசுத்தியாயும் கோரமாயுமுள்ள தொழிலைச்செய்கிறாய்?" என்றுமிகுந்தபரிவுடன்கேட்டார். அப்பொழுது அந்தச்சுவேதன் தன்கதை முழுவதையும்சொல்லி, "நான் பரோபகார சிந்தையே இல்லாது தபஸுசெய்து இறந்தேன். இவ்வாறு செய்ததால் என்னை அடங்காப்பசிதாகம் ஸ்வர்க்கத்திலும் பீடிக்க, எந்த தேகத்தைப் பரோபகாரமின்றிக் கொழுப்பேறும்படி செய்தேனோ அதைத் தின்றே பசிதீரும்படியான நிலையை அடைந்தேன்" என்று பரிதபித்தான். பின்பு நிர்மானுஷ்யமான இக்காட்டில் வந்தவர் அகஸ்தியராகத்தான் இருக்கவேண்டும் என்று ஊகித்து அவரை விசாரிக்கையில், தன் ஊகம் உண்மையானதுகண்டு அவருக்குத் தன்கழுத்திலிருந்த உயர்ந்த ஆபரணத்தை எடுத்துத் தானம் செய்தான். அவன் பசிமுதலியன அடங்கிவிட்டன. அன்றுமுதல்பிணம் தின்னும் கோரத்தொழிலும் அவனைவிட்டு நீங்க அவன் ஸுகம் பெற்றான். இதனால் பரோபகாரம் அற்ற காம்யதபஸ் அவ்வளவு சிறந்ததல்ல, பெரும்பாலும் வீணே என்பது தெரியவருகின்றது.

~~~~~~~~~~~~~~~~~~~~

### உலகவாழ்க்கை

நாப்பிளக்கப் பொய்யுரைத்து நவநிதியந் தேடி
நலமொன்று மறியாத நாரியரைக் கூடிப்

பூப்பிளக்கப் பொய்யுரைத்துப் புற்றீசல் போலப்
புலபுலெனக்கலகலெனப்புதல்வர்களைப் பெறுவீர்

காப்பதற்கும் வகையறியீர் கைவிடவு மாட்டீர்
கவர்பிளந்த மரத்துளையிற்கானுழைத்துக்கொண்டீர்

ஆப்பதனை யசைத்துவிட்ட குரங்கதனைப்போல
அகப்பட்டீர் கிடந்துழல வகைப்பட்டீரே,

எத்தொழிலைச் செய்தாலுமே தவத்தைப்பட்டாலு
முத்தர் மனமிருக்கு மோனத்தே வித்தகமாய்க்
காதிவிளை யாடியிரு கைவீசி வந்தாலுந்
தாதிமன நீர்க்குடத்தே தான்.

# ஸ்திரீகளுக்கான பக்கங்கள்

## LADIES' PAGES

## சகுந்தலை அல்லது பிரிவினிலை

### 4. வழக்குரைத்த காதை.

அடர்ந்து நெருங்கி விளங்கிய மரத்தின் இனங்களெல்லாம் ஒன்றொன்றாய் மறைந்தன. பசம்புல்லும் வயலும் கண்ணிற்கு நெடுந்தூரமாய் விட்டன. மாமரங்களில் வசிக்கும் குயிலின் இனியபாடல்களும் காற்றில் மயங்கி காதிற்படாவிதம் பரவியன. மரவினத்தின் வாழும் பட்சிகள் முதலியவற்றின் சிறு குறலும் பெருங்குறலும் ஒன்றிலொன்று மயங்கி சகுந்தலையும் அவளுடன் செல்லுவோரின் காதிற்பட்டால் ஒரு வேளை படலாம். சாயங்கால வேளையில் புல் மேய்ந்துவிட்டு வீடு செல்லும் மாட்டுக் கூட்டத்தின் கழுத்திற் கட்டிய மணியோசை மனதை ஒருவேளை இழுத்தாலிழுக்கலாம். இதற்குள் இருள் மூடியது. இன்னமும் அயோத்தியை அவர் அடையவில்லை.

காலையுமாகியது. நெடுநேரம் நடந்து அயோத்தியைக் கண்ணுற்றார். தனது நாயகன் ஊரைக் கண்டதும் சகுந்தலையின் மனதில் அடக்கமுடியாத குதூஹலமும் ஆர்வமும் உண்டாகியது. ஹ்ருதயத்தில் முளைத்து உயர்ந்த அன்பு அவளது கண்மேற் பாய்ந்தது. இதற்குள் தான் இந்த இந்த விதமாக இருக்கவேண்டும், இந்தவிதமாக நடக்கவேண்டும்—இது முதலாகிய எண்ணங்களே அவள் மனம் முழுதையும் கவர்ந்தன. இதற்குள் அவர் அயோத்தியைக்குள் வந்து அரசனது கோயிலிடமடைந்தனர். சகுந்தலை மாத்திரம் ஓர்விதமாகிய மனவமைதியும் அடையாதிருந்தனள். அரசனென்ன கூறுவனோவென்ற கவலை ஒன்றே அவள் மனத்தை ஊசலாடச் செய்தது. அது நன்மை தீமை என்னும் இரண்டு அச்சுக்களிடைத் தள்ளப்பட்டு அசையா நின்றது.

இதற்குள் கண்வரது சிஷ்யர்கள் அரசன் மண்டபமடைந்து தம் வரவைக் கூறினர். அரசனும் மண்டபத்திடை வந்துட்கார்ந்தனன். வந்த முனி சிஷ்யர்களுக்குச் செய்யவேண்டியவை எல்லாம் செய்து விண்ணப்பம் யாது என்றான். அவ்விருவரும் "இவள் விசுவாமித்திரருடைய பெண். இவளை நீவிர்
~~~~~~~~~~~~~~~~~~~~

மனம் ஒருமித்துக் காந்தருவ வழியிடை மணந்தீர். கண்வர் இவளை வளர்த்து வந்தவர். இக்குழந்தை உமது மகன். இச்சிம்மாசனத்திற்குரியவன். இவ்விருவரும் உமதுடைமை. பெற்றுக்கொள்ளும்" என்றார். மன்னன் வாய் திறவாதிருந்தனன்; அவரும் தாம் வந்த வழியே சென்றார்.

இதற்குள் சகுந்தலை மனவமைதியற்றுச் சற்றுத் தியங்கினாள். மன்னன் ஒருவேளை தன்னை மறந்துவிட்டனனோ என்றெண்ணினாள். என்ன செய்வது. அரசனும் "யான் இவளை மணந்தேன்? ஹா! இதுவு மெய்யாமோ!!" என்றான். சகுந்தலை காதில் இவை விழுவதற்கு முன்னமே "ஐய உமது பாதாரவிந்தமிரண்டும் என் மனதிற்கு உத்ஸாக மூட்டும் மருந்து. அவை இரண்டும் என் தலைமேற்கொண்டு, உமது தர்சனம் என்னும் ஆநந்தமேலீட்டின் அநுபவத்தினால் உண்டான மனவலிமையே எனக்கு ஸமயத்திற்குத் தகுந்த மனநிலைமை உண்டாக்கக் கடவது" என்று எண்ணி மனப்பணிவோடு அரசன் முன் வணங்கித் தொழுதாள். இருகை கூப்பி "என் உயிர்க்குயிராய் நின்ற ராஜாதிராஜனே! இக்குழந்தை உம்மைந்தன்; எனது மகன். உமது அரசிற்குரியவன். நீர் அன்று மாலினி ஆற்றினோரத்தில் கண்வரது ஆச்ரமத்தில் எனக்களித்த வரத்தைத் தரவேண்டும். தயவுசெய்து எனக்கருள் புரியவேண்டும்" என்றாள் சகுந்தலை.

எல்லாமுணர்ந்த மன்னனும் இதைக் கேட்டான். ஆயினும் ஒன்றுமறியாதவன்போல் "ஹா! என்ன தைரியம்! யான் இவளை மாலினி ஆற்றங்கரையில் கண்டதும் உண்டோ! காந்தருவ விவாஹம்! ஆஹா! என்னமொழி! இது ஒரு பேயுருவம்! பெண்முனி! பிசாசு! நீலி! கூச்சம், வெட்கம், நாணம் என்பன இல்லாது ஒரு புருஷனைத் தன் கணவனென்று வரித்ததும் அல்லாமல், நெறி கெட்டிருப்பதும் அல்லாமல், என்னுடைய மனைவி என்று கூறவும் தைரியமா! ஹே கொடிய பேயே! நீ யார்க்குரியவள்? உன்னை நான் மணந்ததாக என் மனத்தில் தினையளவும் எண்ணமுடியவில்லை. அறம், பொருள், இன்பமிவை மூன்றிலொன்றிற்கேனும் உன்னுடன் நான் ஸம்பந்தப்பட்டவன் அல்ல. வந்தவழியே செல்வாயாக! இனித் தாமதித்தல் தகுதி அல்ல" என்று அரசன் படபடத்துக் கண்ணில் நெருப்புப் பொறி பறக்கச் சீறினான்.

கூடவந்தவர் துணையும் அற்று, பெற்றோர் உற்றோர் அனைவரையும் அற்று, கணவனைக்கண்டு களிப்புற்று வாழவேண்டுமென்று வந்த சகுந்தலைக்கு இம்மொழிகள் எவ்வாறிருக்குமென்று நீங்களே அறியலாகும். நாமென் சொல்லவேண்டும்? ஆயினும் அவ்வரிய நிலையில் நீங்களிருப்பின் என்ன செய்வீரென்பது மாத்திரம் நமக்குத்தெரியாது. உமக்கும் தெரியுமோ, அந்நிலையில் எவ்வாறு இருப்பீர்களென்று எண்ணலாவது முடியுமோ—அதுவும் எமக்குத் தெரியாது. அதுபோகட்டும். சகுந்தலைக்கு அம்மொழிகள் எவ்வாறு பட்டன? மடமையில் மயங்கி, கூச்சத்தால் சற்றே வெட்கி, உடல்தெரியாது அயர்ந்தாள். பதுமைபோல் அசைவற்றுச் சற்று நின்றாள். அந்நிலை நெடுநேரம் இருந்ததாகத் தெரியவில்லை. ஆயினும் தன்னை நெறியற்றவள் என்ற மொழி அவள் உடல்முழுதையும் ஒருமுறை பதைக்கச்செய்தது. கோபம் அரும்பி, கண்களில் தீப்பொறி மூட்டி கணவனது முகத்தினிடையே பறக்கச்செய்தது. வாய் படபடத்து மெய்ம்மறந்து கீழ் வருமாறு தன் இருதயமும் மனமும்கலந்து எல்லார் மனமும் கலங்கக்கூறினாள் :—

"நீங்கள் அரசருள் பெரியவர். என் உயிர்க்குரியவர். தாங்கள் கீழ்மையான வழிக்குச் செல்வதரிது அல்லவா? என்னை மணந்தது உம்மனம் அறியாதோ! 'தன்னெஞ்சறிவது பொய்யற்க'. ' எளியேன் கூறுவது பொய்யோ மெய்யோ உமது மனமே அறியும். யான் சொல்லவேண்டியதில்லை மனத்திலொன்றெண்ணி வெளி ஒன்று கூறுதல் உமக்கழகாகுமோ? நாமிருவரும் கலந்து பேசிய மொழிகள் வேறு யாருமறியார் என்று எண்ணினீர்கள். மலை, காடு, மரம், நீர் முதலியவெல்லாமறியும் ஸூரியாதியரும் அறிவர். நீங்கள்கூறிய மொழிகளை தருமதேவதை அறிந்ததில்லையோ? பிறர்க்குத் துன்பமுண்டாக்கக் கூடாதென்னும் எண்ணத்துடன் பொய்க்கூறில் அது பொய்யாகமாட்டாது ஒருவரைக் கெடுக்கவேண்டுமென்று நீங்கள் செய்வது தருமமல்ல. தனது வாய்மையைத் தாழ்த்திய மனிதனுக்குப் பெருமையுண்டோ? அவர்கூட்டத்துள்ளா யான் உம்மைச் சேர்க்கவேண்டும். அத்தகையாரை அவர் மனமே கொல்லுமல்லவா? மனவமைதியற்று அவர் அலையார்களா? என்னைக்கொள்ளத் தடுத்துவிடுவீராயின் தருமபத்தினியைக் கைவிட்ட தோஷமன்றோ உமக்குவந்து நேரிடும்? அது

உமக்கு வந்து சேரல் என்மனத்திற்கு உத்ஸாகமூட்டுமோ? *மனைவி கருவிலிருந்து தோன்றி மகனுயிருள் தந்தையுயிர்க்கலந்திருந்து தனதுயிர்க்கு மறுமையில் புத் என்னும் நகரத்தை நீக்கப் பிறத்தலில்லையா? இதனாலன்றோ மனைவிக்கு ஜயை என்றுபெயர். மனைவிக்குப் பிறந்த மகனன்றோ எழுபிறப்பு முன்னோரைக் காப்பாற்றுவது: இதனாலன்றோ மகனுக்குப் புத்ரன் என்ற பெயருண்டாகியது. தன் மனைவியின் கருவில்தானே யுதித்து கஷ்டங்களைத் தீர்த்துக்கொள்ள மகனைப் பெருகிறான். தனது பேரன் பிறந்ததும் மோட்சமடைகிறான். இவை எல்லாம் மனைவியின்றி முடியுமோ. தருமபத்நி இல்லாதிவை யாகுமா?

"தன் கணவனது உயிர்க்கு உயிராயிருந்து, வருவாய்க்குத் தக்க வாழ்க்கை செய்பவளல்லவா ஸரியான மனைவி? தன் கணவனுக்கிணங்கி அவர் மொழி தவறாது இருப்பவளல்லவா மனைவி? அவர் மானம் முதலியவைகளைக் காப்பாற்ற முயலுபவளல்லவா ஸரியான மனைவி? கணவனது அறையுடல் மனைவியல்லவா? கணவனுக்கு அறம் பொருள் இன்பம் தர வருபவளல்லவா மனைவி? வீட்டையளிக்க வழியூட்ட வந்தவளும் மனைவி தானே? மனைவியின்றிச் செய்த அறமும் நிலைபெறுமோ? மனைவியின்றி வீட்டின்பமுண்டாமோ? ஸுகம் கிடைக்குமோ? ஸரியான மனைவியன்றோ தனது மொழியால் தன் கணவனுக்கு இன்ப மூட்டுபவள். தருமத்தைத் தகப்பன்போல் நிலைக்கச் செய்பவளும் அவளன்றோ? கஷ்டகாலங்களில் தாய்போல் உழைப்பவளும் அவளல்லவா? காட்டிலலையும் காலத்தும், நாட்டில்வாழும் நாட்களிலும் அவளல்லவா பக்கிலிருந்து ஆதரிப்பவள். மனைவியுள்ளவரிடத்து எவருக்கும் ஸந்தேஹமுண்டாகாது. மனைவியை நீங்கள் நீக்கமுயல்வது நியாயமாகுமோ?

"கணவனிறந்ததும் தன்னுடலைவிட்டுவிட்டு உடன் வருபவளும் மனைவிதானே! தான் முன்னிறப்பின் கணவனது ஆத்மாவரவை வழிகொள்ளக் காத்திருப்பவளும் அவள்தானே! இதற்காகத்தானே உலகில் மணமென்பது ஏற்பட்டது. இகத்தும் பரத்தும் மனைவி கணவனுடன் வாழவென்றல்லவா பிணிக்கப்பட்டுள்ளாள்.

"தன்னுருவின் பிம்பமே தன் மனைவியின் கருவிலிருந்து வரக்கண்டு, அக்குழந்தையைக் கண்டானந்திப்பது எதனால்? அதன் சிறு கைகளை நீட்டி விளையாடி ஆடும் நடைகள் உமது மொழிகளை யிழுக்காவோ? அவற்றின் உடல் உமதுடலிற்பட்டதும் இன்பம் சுவைக்கவில்லையா? இக்குழந்தை உமதன்றோ? உம்மையே காணும் இக்குழந்தையை வா என்றும் கூவாதிருத்தலும் அழகாமோ? அறிவற்ற சிறு எறும்பும் தனது முட்டையைக் காப்பாற்றிக் குழந்தைபால் இருக்கும் அன்பைக் காட்டுகின்றது. உமக்கு நெஞ்சும் கல்லோ? உம்மேலேயே கவனமுற்றும் செலுத்தும் குழந்தையைக் காண உமக்குப் பிடிக்கவில்லையோ? 'மக்கள்மெய்த்தீண்ட லுடற்கின்பம் மற்றவைசொல் கேட்டல் இன்பம்' செவிக் * கல்லவா? 'இடைபடக் குறு குறு நடந்து, சிறு கை நீட்டி, இட்டும், தொட்டும், கவ்வியும், துழந்தும், நெய்யுடை அடிசில் மெய்பட விதிர்த்து, மயக்குறு மக்க'† ளது வாய்மொழியைக் கேட்டேனும் உமக்கு நெஞ்சு இளகாதோ? அதுபோகட்டும், இக்குழந்தை பிறந்தகாலத்து எனது பிரசவக் கிருஹத்தில் 'இக்குழந்தை நூறு அச்வமேதம் செய்வான்' என்று அசரீரி வாக்களித்தது.

"புருகுலத்து மஹாராஜனே! என்னைப் பரிக்ஷை செய்யாதிரும். வீணாய் என்னை ஏன் வருத்தவேண்டும். இக்குழந்தை மேலும் உமக்கருளில்லையோ? இதுவுமாமோ? குழந்தைக்குப் பிறந்தநாள் கொண்டாடிய தினத்திலும் 'நீ என்னுடலிலிருந்து தோன்றியவன். நானே என்னை உன்னுருவாக்கினேன். நீ நூறாண்டுவாழி! —நீயே என்னுயிரைக் காப்பவன். என் குலம்உன்னாலேவிளங்கவேண்டும். நீ நூறாண்டு வாழிய!' வென்றுகூறும் வேதமந்திரங்களும் உமது மனத்தைச் ஸரிப்படுத்தாவோ? இக்குழந்தை உமதுருவாய் இருத்தலும் தெரியவில்லையோ? யான் உமது மனைவியென்று தெரிந்தும் உமக்கு அருளில்லையோ? என்பால் உமக்கேன் இவ்வாறு வெறுப்புண்டாக வேண்டும்? ஹா! இதுவும் என்கதியோ? உம்மையன்றி எனக்குப் பெரியோரில்லை. அன்பற்ற தாயாகிய மேனகை என்னைத் தனியேவிட்டுச் சென்றனள். நீவிரும் என்னைக் கைவிடுதல் ஸரியாமோ? என்னை ஒதிக்கினும் ஒதிக்கிடுக! இக்குழந்தையை அவ்வாறு செய்யாதிருக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்ளும் இந்த ஓர் வரமேனும்
டும்" என்று நெட்டுயிர்ப் பெறிந்து கூறினள்.

* திருக்குறள். † புற[illegible]

இவற்றை யெல்லாம் கேட்டிருந்த மன்னன் "நன்று! நன்று!! உன் தாய் ஓர் விலைமகள். உன் தகப்பன் மிகக்காமி. நீயோ வெட்கமின்றிப் பேசுகிறாய். மடம், நாணம், அச்சம், பயிர்ப்பு இவையுள் ஒன்றேனும் உன்னிடமில்லை. பச்சைப்பசும்பொய்யெல்லாம் கூறுகின்றனை. உன் தாய் உன்னைப்பெற்றதும் கவலையற்று ஒதிங்கிவிட்டனள். மிகக்கொடியவள். உன்குலம் மிகக்கீழ்மையைக் காட்ட உன்னை எவ்வாறு நம்புவது? உன் தாய்தந்தையர் எல்லாம் என்ன செய்கின்றனர்? நீ எங்கிருக்கின்றனை? அதுபோக—இவன் உன் மகன்! காளைபோல் பெருத்து சாலமரம்போல் உயர்ந்துள்ளான். இவனுக்கு மூன்றுவயதாம். நன்று! நன்று!! அழகுதான் இது!! நீ சொல்லுவதெல்லாம் எனக்குப் புதியதாக இருக்கின்றது. ஹே! சகுந்தலை! இவன் என் மகனல்ல. நீ சொல்வது முற்றும் பொய். பெண்பேச்சு பொய்ப்பேச்சல்லவா? உன்னை யார் நம்புவார்கள்? உன்னை நம்பும் வழியாது?" என்றான்.

சகுந்தலைக்குக் கோபம் மூண்டுவிட்டது. "ஹே ராஜ! நீவிர் என் தலைவர். நான் உமது மனைவியாக நீவிர் கொள்ளாவிடினும், நீர் எனக்குத் தலைவர் என்று நன்றாகத்தெரியும். என் இனத்தைப்பற்றி என்னவேனும் பேசிக்கொள்ளலாம். பெண்டிருக்கு கணவனுடைய ஜாதிதான் தன் ஜாதியாகும். கணவனன்றி வேறு பொருளும் கிடையாது. உம்முடைய திருவடியின் பாதப்பொடிகளன்றி என்னுயிர்க்கு இன்பமளிக்கும் மருந்து வேறு கிடையாது. தாய்வீடு, அவ்வீட்டுறவு இவை எல்லாம் நிலையல்ல. உம்மையன்றி எனக்கோர் உறவுமில்லை. பாபம் என்பது கொஞ்சமேனுமறியாத தாங்கள் என்பால் இவ்வாறு செய்வது ஆமோ? என் மனத்தில் உண்டாகும் கோபமெல்லாம் உமது முகத்தின் பார்வையைக்கண்டால் எனக்கும் தெரியாது ஓடிவிடுகின்றன. நான் எளியேன். உம்மையன்றி வேறு யாரையும் நினையாதவள். நீவிரே என்னைக் காப்பாற்றுவதாகக் கூறிவிட்டு இப்போது இவ்வாறு சொல்லுகிறீர்கள். என் மனத்தில் உண்டாகும் துன்பமின்னதென்று கொஞ்சமேனும் உமக்குத் தெரிந்தால் வாறு செய்வீரோ என்பது ஸந்தேஹம். ஆயி ன் ஒன்று சொல்லவேண்டி வருகிறது. லுகிறேன் என்று கோபித்துக்கொள் வண்டும். நான் அதைச் சொல்வதற்கும் என்னை மன்னிக்கவேண்டும். 'கண்ணாடியில் தன்னழகைக் கண்டாலன்றி, அழகற்றான் தன்னழகை அறிவதாமோ' என்ற ஓர் பழமொழி கேட்டதுண்டு. இதை உதாரணமாகச் சொன்னேனே அன்றி கெட்ட எண்ணம் கொண்டு சொல்லவில்லை. குற்றமுள்ளநெஞ்சம் குறுகுறுக்கும். தமது நெஞ்சில் கறையிருந்தாலன்றிப் பிறரை ஏன் அவ்வாறு எண்ணவேண்டும். தாமரை மலரில் இருக்கும் தேரை தேன் கொள்ளாது நீரின் அழுக்கைத்தான் உண்ணும். நீர் கலந்த பாலுள், பாலைப் பிரித்துண்பது அன்னமல்லவா? 'வாய்மை எனப்படுவது யாதெனின், யாவர்க்கும் தீமை யிலாத செயல்'.* ஒருவர் மனத்திற்குத் துன்பமுண்டாகும்படி செய்வது பெரியோரியல்பாமோ? 'தாமின் புறுவ துலகின் புறக்கண்டு, காமுறுவர் கற்றறிந்தார்'* அல்லவா? என்னை இவ்வாறு நீவிர் செய்வது தருமமாகுமோ? 'காதலாள் கரிந்துநையக் கடியவே கனைந்து கன்றி'†க் கொடுமொழி கூறி அவர்க்குத் துன்பமுண்டாகச் செய்வது தருமமாகுமா? வாய்மையின் வழியை விட்டோடுதல் அரசர்க்குரியதோ? தெய்வமில்லையெனக் கூறும் நாஸ்திகரும் பொய்கூற அஞ்சுவர். ஹே அரச! நீர் என்னைத் தனியே மணந்து எனக்குக் கூறிய மொழிகளும் இருக்க, இல்லை என்று கூறலாகுமோ? என்னை மனையாளாகவும் கொண்டு, பின் என்னை வீட்டிற்கொள்ளாது இருத்தலாகுமோ? ஒரு குற்றமுஞ் செய்யாத பெருமையுற்ற 'மனையாளை யில்லாதான் இல்லகம், காண்டற் கரியதோர் காடு'‡ அல்லவா? என்னைத் துரத்துவதில் உமக்கே துன்பமுண்டாகும். யான் நிராபராதி. அப்படி என்னை விட்டுவிடினும் இக்குழந்தையையும் விட்டுவிடலாமோ? உமக்கும் உம் ஸந்ததியார்க்கும் வீடளிக்க நிற்கும் இவனை விட்டுவிடலுமாமோ? இனி என்னால் பேச முடியவில்லை. உம்மேல் எனக்கெவ்வளவோ கோபமுண்டாகின்றது. ஆயினும் உம்மிடமுண்டாகிய அன்பானது அதை மறக்கச்செய்து விடுகிறது. உமக்கென்மேல் அருளில்லை. ஆயினும் யான் இறக்க நேர்ந்திடினும் மறுபிறப்பில் உம்மையே மணக்க ஈதோர் வரம் வேண்டும். யான் பெரும்பாவி. முன் புத்தியின்றி மயங்கினேன். சிறுபொழுதில் தாயால் தள்ளப்பட்டேன். இப்பொழுது கணவனால் தள்ளப்பட்டேன். உயிர் வாழ்வதில் என்னபயன்? இனி உயிர்விடுவது நலம். உமது உம்பாலாகட்டும். காலெ

* திருக்குறள். † சீவகசிந்தாமணி. ‡ நாலடியார்.

டுத்துவைக்க மனமும் இசையவில்லை. என்ன செய்வது. கடைசியாகக் கேட்டுக்கொள்ளுகிறேன். என் மனம் உம்பால் இழுக்கப்படுகிறது. உமது மறதியோ ஏதுவோ உம்மை இவ்வாறு செய்துவிட்டது. யான் பொய்கூறவில்லை. தேவரீர் உமது வாய்மை ஒழியாதிருக்கவேண்டுமென்பதே. என்னை ஒழித்திடினும் ஒழித்திடுக. உமது மொழியைக் காப்பாற்றுக. இச்குழந்தைக்குப் பட்டம் கட்டிவைக்கவேண்டியதே. நீவிர்எவ்வளவு கடிந்துரைப்பினும் உமக்குநன்மையே என் மனம் கோறுகின்றது. இனி என்கதி எதுவோ அதுவே வரட்டும். காடோ மலையோ சென்று கணவனென்னு லக்ஷியத்தைக்கொண்டு மற்றோர் பிறவியிலேனும் உம்மை அடைவேன். யான் தெரியாது ஏதேனும் வாய்தவறிக்கூறியிருப்பினும் மன்னிக்கவிரும்புகிறேன்" என்று மனம்புகைய, உடல்வெப்பத்தோடு, கண்களில் நீர்த்துளி அரும்பி முத்தென சிந்த, மன்னன் துஷ்யந்தனை வணங்கித், தான் வந்த வழியை நோக்கிச் செல்ல வலக்காலெடுத் தசைத்தும் "ஏன் என் இடத்தோள் துடிக்கவேண்டும்" என்று எண்ணிக்கொண்டே மெல்ல ஆழ்ந்த சிந்தையோடு நடந்தாள்.

## 5. பெருமை பெற்ற காதை

சகுந்தலை காலடி எடுத்திரண்டடி வைத்திருக்கலாம். இதற்குள் மேல் பெருமொலி ஒன்றுண்டாகி "ஹே! துஷ்யந்த! சகுந்தலைகூறியது முழுதும் மெய். நீ அவளை உன் மனைவியாகவடைந்து, உன் மகனை இளவரசனாகச் செய்க. இனிச் சகுந்தலையின் மனத்தைப் புண்படுத்தாது வீட்டிற்கொள்க. யாம் சொல்லி இக்குழந்தையைக் கொள்வதால் இவனுக்குப் பரதனென்று பெயரிடுக" எனச் சபித்தது.

சகுந்தலையும் இக்காலவாமிபாதெனத் திரும்பிப் பார்த்தனள். அரசன் சகுந்தலையைத் தன்னருகழைத்து, மகனைப் பக்கிலுட்காரவைத்துக்கொண்டு ஸபையோரைப் பார்த்து "பெரியோர்களே! கேட்டீரோ இவ்வசரீரிமொழியை. எனக்குச் சகுந்தலை தெரியாது என்று நீங்கள் எண்ணக்கூடாது. எனக்கு நன்றாய்த் தெரிந்திருப்பினும் யான் இவளை மணந்தது யாருக்கும் தெரியாது. அதனால் யான் மனைவி என்று கூறில் உலகிலிருப்போர் என்னவென்று சொல்வார் தெரியுமோ? ஏதோ ஓர்மடந்தை 'நீ என்கணவன்' என்றுகூற அரசன் காமமயக்கால் அவளை இச்சித்து அவளை மனைவி என்று ஒப்பிக்கொண்டான் என்று கூறுதிருப்பாரோ? சகுந்தலை என்மனைவி என்று காட்டினலன்றி யான் அவளை எவ்வாறு அடைவது. உலகத்திற்கு அரசராகியவர் ஜன ஸமூகத்தின் பாவங்களுக்கிணங்க நடப்பதன்றித் தம்மிடத்துத் தினையளவும் குற்றமில்லாதிருத்தல்வேண்டும். அதனாலே யான் சகுந்தலையைத் தானே கன் விவரத்தை முற்றுங் காட்டவேண்டும் என்னும் எண்ணத்தால் தெரியாதவன் போலிருந்தேன். இனி நாளைமுதல் என் குழந்தை ஸர்வதமனன் இளவரசுபட்டம் பெறுவன்" என்று கூறிவிட்டுச் சகுந்தலையை நோக்கிப் பின்வருமாறு பேசலானான் :—

"சகுந்தலை! யான் உன்னை யாரும் தெரியாது மணந்தேன். யாவருமதை அறியார். ஆகையால் ஜனங்கள் நம்மைக் காமமுதிர்ச்சியால் சேர்ந்தவர் என்று எண்ணுவர். மனைவி கணவன் என்னும் முறைமையுள்ளவர் என்று எண்ணமாட்டார்கள். 'ஊர்வாயைமூடவும் உலைமூடி யுண்டோ?' இளவரசபட்டமடையநிற்குமிக்குமரன்நற்குடியில்பிறவாதவன் என்றும் எண்ணப்படுவன். ஆகையால் உனது பிரிவினிலையில் நின்ற கற்பை விளக்குவது எவ்வாறு என்று ஆலோசனை செய்துகொண்டிருந்தேன். இவ்வழிதான் நன்மை பயக்கும் என்று எண்ணினேன். காதலி! நீ உத்தமி. உன் மொழிகளில் கோபத்தில் வந்த தகாத மொழிகளனைத்தையும் மன்னித்தேன். நீயே என் அன்பிற்குடையவள்" என்று கூறி சகுந்தலையை அரசிக்குரிய வரிசையோடு கைக்கொண்டான்.

பரதனுக்கு முடி சூட்டுவித்துச் சகுந்தலையின் கோரிக்கையை ஈடேற்றினான். அவன் சக்ரவர்த்தி, சார்வபௌமன் என்னும் பட்டங்களுடனும் சிறுபொழுது பெற்ற ஸர்வதமனன் என்ற பெயருடன் விளங்கி, பாரதன் என்னும் பட்டப் பெயருடன் உலக முழுதையும் வென்று பெருமை வாய்ந்திருந்தான். அவனது வம்சத்தினர்க்கு பாரதர் எனப் பெயர் விளங்கியது. அவர் வைபவத்தைக் கூறுவதே பாரதம் எனப்படும்.

என்பது வியாசர் எழுத... த்தில் அதிபர்வத்துட் பிரிவான ஸம்பவ... துட் கண்ட காதை.*

* இதை எழுதும்பொழுது ஸ்ரீகாளிதாஸரது அபிஞ்ஞான சாகுந்தலத்தை முதநூலாகக்கொண்டு எழுதுவதாக எண்ணி அயோத்யை துஷ்யந்தனது நகராக எழுதப்பட்டது. ஆனால் சகுந்தலையின் குணவிசேஷத்தையும் அதனை அரசன் தர்மநிலையுள் நிற்கும் நிலையையும் மஹாபாரதநூலே நன்கு விளக்குவதால் பின் பாரதத்தை முதநூலாகக்கொண்டு, இவ்வழிக்கு காளிதாஸரது நாடகத்தை வழிபடமுடியுமோ அவ்வளவு வழிப்பட்டெழுதப்பட்டுள்ளது படி... கள் 'அயோத்யை'யை 'ஹஸ்தின...' வருமிடத்தி லெல்லாம் மாற்றிக் ெ... கேட்டுக்கொள்ளுகிறேன். மேலு... நாடகத்தில் தோழிகள் கணையாழி... தலைக்கு ஞாபகமூட்டாது... திற்கு மாறாக விருத்தலோடு... நாடகமுழுதுமே ஒங்குவ... முடியவில்லை.

## விசேஷ வர்த்தமானங்கள்
## GENERAL NEWS

ஆட்டுப்பால் ஆகாரம்.—பசுக்களிலனேகம் சுவாசாசய சம்பந்தமான வியாதிகளுக்கிரையாவதால், பசுவின்பாலைச் சாப்பிடும் குழந்தைகளுக்கும் க்ஷயம் முதலிய வியாதிகளுண்டாவதற் கேதுவுண்டென்றும் ஆடுகளுக்குச் சாதாரணமாக சுவாசாசயத்தை ஒட்டியநோய்கள் வருகிறதில்லையாதலால் ஆட்டுப்பால் ஆகாரமே மேலானதென்றும் தற்காலசாஸ்திராராய்ச்சி சங்கத்தினர் கண்டுபிடித்திருக்கின்றனர். ஜர்மனிதேசத்தில் ஆகாரத்திற்காக ஆடுமாடுகளை அடிக்கிற இடத்தில் ஒருவருஷத்தில் கொல்லப்பட்ட பசுக்களில் 100-க்கு 46-இல் க்ஷயரோகங் கண்டிருந்ததென்றும், ஒருவருஷத்தில் கொல்லப்பட்ட 1,500 ஆடுகளில் 9-க்குமட்டும் நோய் தொற்றியிருந்ததாதவும் கண்டுபிடித்தனர். ஆதலால் குழந்தைகளுக்கு மாட்டுப்பாலைவிட ஆட்டுப்பாலே விசேஷித்த ஆகாரமென்னலாம்.

மேலும் மனுஷதேக சம்ரட்க்ஷணைக்கு ஆட்டுப்பாலே சிறந்தது. ஏனெனில் அது மகாசுத்தமானது. அதிகம் போஷிப்பைக் கொடுக்கக்கூடியது. எளிதில் சீரணிக்கத்தக்கதும் ஏறக்குறையத் தாய்ப்பாலுக்குச் சமானமானது. ஆதலால் சிசுக்களுக்கு இது விசேஷித்த ஆகாரமாகும். ஆட்டுப்பாலிலுள்ள கொழுப்பு தசைகள் மகா நுண்ணியவைகளானதால் அதில் எளிதில் பாலோடு திரளுகிறதில்லை. அதிகநேரம் கெட்டுப்போகாமலும் இருக்கும். ஆட்டுப்பால் எளி[illegible]ற்கும் காரணமிதுவே.

[illegible] முதலிய தேசங்களில் [illegible]ளுக்கு ஆட்டுப்பாலை ஔஷதமாக [illegible]ாடுப்பதுடன் குழந்தைகள், வியாதியஸ்தர் முதலியவர்களுக்கு கொடுக்கும் ஆகாரங்களை ஆட்டுப் பாலிலேயே சமைத்துக் கொடுக்கிறார்கள். சுவாசாய நோய்களுக்கும் அசீரணத்திற்கும் ஆட்டுப்பாலைச் சாபபிடச் சுகமுண்டு.

கியுபாநாட்டில் ஆட்டின் கால்களை ஒரு நாற்காலியுடன் சேர்த்துக் கட்டிவிட்டு குழந்தைகளை ஆட்டு மடியிலேயே பால் குடித்து வரும்படி செய்வார்கள்.

பால் கொடுக்கும் ஆடுகள் சுத்தமும் புஷ்டியைக் கொடுக்கத்தக்கதுமான கடலை முதலிய ஆகாரத்தால் [illegible]ர்த்தால் அவற்றின் பாலில் கவுச்சுநாற்றமில்லா[illegible]ன் போஷிப்பையுங் கொடுக்கும். மலைப் [illegible]ல் வேளாண்மைக்குதவாத நிலமே [illegible]டித் திரிந்து ஆகாரம் புசித்து வளர்வ[illegible] மேய்ச்சற்தலமாகும். நன்றாய்ப் [illegible] ஆட்டில் ஒருநாளைக்கு மூன்று [illegible]ம். ஒரு மாட்டுக்குப் போடும் [illegible]களை வளர்க்கலாம். மாடுகளைப்போல ஆடுகள் அடிக்கடி நோய் கொள்வதுமில்லை.

ஆமணக்கெண்ணை.—இந்த எண்ணைபோல அவ்வளவு நட்டஞ்செய்யாததாய், பொதுவான அனேக நோய்களை நீக்குகின்றவஸ்து பிறதில்லை. இந்த மருந்தை உட்கொள்வதற்கு ஒரேயொரு தடையுண்டு. அஃதியாதெனில் அது சாப்பிடப் பிரீதியான பொருளல்லவென்பதுதான். கறுவாத்தைலம் இக்கஷ்டத்தை நிவர்த்திசெய்யச் சிறிது உதவும். சிலர். காடி, உவிஸ்கிப்பானக்களோடு சேர்த்து அருந்துகின்றனர். கொஞ்சம் பனிக்கட்டியை வாய்க்குள்ளிட்டு எண்ணையைப் பரிமாறினால் யாதொரு கஷ்டமுமின்றி உட்கொள்ளலாம்.

அசுத்தமான பால்.—பொருள்கள் யாவற்றிலும் அதிக கெடுதியாகவும் இலேசாகவும் பழுதடைவது பால்மாத்திரமே. அஃது முதலாவது கறப்பவர்களினால் அசுத்தமடைகின்றது. அப்பால் கொண்டு சென்று விலைப்படுத்துவோர் அசுத்தமாக்குகின்றனர். அசுத்தமான பால் சிறு பிள்ளைகளின் உதரத்துக்குள்ளே சில வேளைகளிற் தாங்கொணா வருத்தங்களை உற்பவிக்கின்றது. அத்தருணம் வேற்றுப் பால் பிரயோகஞ்செய்யச் சுகமாகும். பாலைக் காய்ச்சும்பொழுது கிருமிகள் கொல்லப்படுகின்றன என்றாலும் வேறும் மாற்றங்களுண்டுபட்டுப் பிள்ளையின் சீரண உறுப்பைச் சீர்குலைக்கும். நன்றாய்க் காய்ச்சியபால் குடித்துவரும் குழந்தைகள் சிலருக்கு ஓர்வகை வருத்தமுண்டாகிறது. இளஞ்சூடாகக் காய்ச்சிய பாலுண்ணச் சுகமாகும். காற்பைந்து பால் ஐந்து அல்லது ஆறு மணித்தியாலநேரத்தின் பின் ஆறுகோடி புழுக்களுள்ளதாயிருக்கும். அசுத்தமானபால் வளர்ந்தவர்களுக்கும் அசௌக்கியத்தைக் கொடுக்கும். சில வேளைகளில் "டைபோயிட்" என்ற சுரம் இவ்வகையான நச்சுக்கிருமிகளினாற் தொடர்கின்றது.

உப்புச்சலஸ்நானம்.—சமுத்திரஸ்நானம் இயலாதபோது உப்புச்சலஸ்நானம் ஏனைய ஸ்நானங்களெல்லாவற்றிலும் விசிட்டமானதென்று "குடும்ப வைத்தியன்" என்ற நூல் கூறுகின்றது. மிகுந்த இலகுவாகவும் செலவுச் சுருக்கமாகவுஞ் செய்யக்கூடியதொன்று. வீட்டிற்றானே மேற்படி ஸ்நான சுகத்தையடைவதற் கேற்றவழியும் இதுவேயாம். ஒரு மட்சாடியிலே உப்பையிட்டுப் போதுமான தண்ணீர்விட்டு உப்பைக் கரைத்துக்கொண்டு ஸ்நானஞ் செய்துகொள்ளலாம். கைநிறைய அச்சலத்தை மொண்டு தேகத்தை நன்றாய்த் தேய்த்துக்கழுவவும். அப்பால் சுத்தசலத்திலே மூழ்கி உலர்ந்த [illegible]திரத்தினாலே சூடுபிறக்கும்படி துடைத்துக்கொள்ள வேண்டும். உடனே சந்தோஷமான புதுச்சுகம உணரப்படும். உப்புச்சல ஸ்நானம் தேகவளர்ச்சிக்கும் காந்திக்குமேதுவாகும்.




SANITATION




MODERNISE
YOUR
HOMES AND OFFICES
CONSULT

# CHANDRA CORPORATION

FOR:

**LATEST SANITARY FITTINGS & ARTISTIC MOSAIC FLOORINGS**



**CIVIL AND SANITARY ENGINEERS AND CONTRACTORS,**
**MUNICIPAL LICENCED PLUMBERS.**

Police Head Quarters Road, COIMBATORE





6976
6985